நாம்பெறுமளவு மருளானே. (சீராருமித்யாதி) அழகார்ந்து வளர்ந்து வருகிற பொழிலாலே சூழப்பட்ட திருவாலிவயலிலே வாழுகிற, தன்மேதாளிவிட்ட செவ்விமாலைபெறில் ஜீவித்து, பெறவிடில் முடியும் படியாயிருக்கிற வெனக்கு. (தன்தாராயாகிலுந்துளபம் பெறுந்தகைமையேற்கு)என்று-தம் ஸ்வரூபத்தைச் சொன்னபடி யென்தான்!.(அருளானே) ப்ராணிநியார்த்தி பரிஹரிக்குமதுபோலல், நாட்டொப்பானவருளு மின்றிக்கே யொழியவேணுமோ !. (தன்தாராயவித்யாதி) தனக்கே அஸாதாரணமாய் தாரையுடைத்தாயிருந்துள்ள செவ்வித் திருத்துழாயைப்பெறில் உளேனாய், இல்லையாகில் இல்லையாம்படியிருக்கிற என்பக்கல் க்ருபைபண்ணுனே. கந்தல்கழிந்தால், பின்னை திருத்துழாயோபாதி, கௌஸ்துபாத்தோபாதி ஸ்ப்ருஹணியமாயாய்த்து வஸ்து ஸ்வபாவமிருப்பது. (அருளானே) ஸாமாந்யரக்ஷணம் தப்பநில்லாத வன் விஶேஷரக்ஷணத்திலே தப்பநிற்குமோ !. ஆசையில்லாத ஜகத்தையும் ரக்ஷிக்குமவன், தன்னைப்பெறில் உளேனாய் இல்லையாகில் இல்லையாம்படியிருக்கிற வென்விஷயத்தில் நெகிழநிற்குமோ !. அவனுடையப்ராணித்வத்துக்கு விஷயமாய்த்திலோமாகிலும் அவனுடைய க்ருபைக்கு விஷயமாகாதொழிவதோமோ !.

(சீராருமித்யாதி) வாழ்ந்தார்க்குக் கெட்டாரை யெடுக்கவேண்டாவோ. (சீராரும்வளர்பொழில்சூழ்) "ஊர்வளம் கிளர்சோலை"[உ0] என்கிறபடியே -ஊரில் ஸம்ருத்தியடையச் சோலையே கோடிகொள்ளித்தரும்படியாயிருக்கை. (வளர்பொழில்) "வளரிளம்பொழில்" என்னுமாப்போலே – வளரவளர முதுமையின்றிக்கே இளகிப்பதித்திருக்கை. ஐஶ்வர்யத்திலுடைய ஸம்ருத்தியைத் தெரிவியாநின்றுகொண்டு வளர்ந்தபொழிலாலே சூழப்பட்ட திருவாலியிலே வாழுகிறசிறுதருமே. அங்குத்தைவர்த்தநந்தானே வாழ்ச்சியாயிருக்கை; கோயில்வாஸம் போலே.

கீழ்வாக்யவிவரணம் (தன்தோளிவித்யாதி.)வ்யாக்யாதாவின் படாய(தன்தாராயவித்யாதி.)நாயிகையானவள்,வாராநின்றுளென்றுதே"அருளானே" என்னைக்கூடுமோவென் னவருளிச்செய்கிறார்(ப்ராணிநியித்யாதி. வாக்யார்த்தம்(தனக்கேயித்யாதி.) அஸவத் தைப்பெறுகைக்குயோக்யமான ஸ்வபாவத்தையுடையவளென்றுமபிப்ராயமாய்க் கீழருளிச்செய்து, அஸவத்திலுடைய, பெறும்தகையேற்கு - எம்பெருமான் லஹி க்கும்படியான ஸ்வபாவம்போன்ற ஸ்வபாவத்தையுடைய வெனக்கு என்று மபி ப்ராயமாக்கி, தாத்பர்யாஸ்ரமருளிச்செய்கிறார் (கந்தலித்யாதி.) வஸ்து - ஆத்ம வஸ்து. "அருளானே" என்றது - பிரிநிலையேகாரமாய, அருளும் என்றுக்கி ஒரு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாமாந்யேத்யாதி.) விவரணம் (ஆசையில்லாதவித்யாதி.) விஶேஷரக்ஷணத்தில் தப்பநில்லானாகில் உன்னை யிப்படிப்படுத்தினவன் நான்போனபின்பு தப்பிநானோவென்ன வருளிச்செய்கிறார்(அவனுடையவித்யாதி;) ப்ரணயத்தாலே வாராவிடிலும் உபாயஞ்வானகையாலே என்னார்த்தியைக்கேட்டுவருமென்று கருத்து.

தாத்பர்யத்தையருளிச்செய்து, அபிப்ராயம் (ஐஶ்வர்யத்திலுடையவித்யாதி.)

மூ. — தானாகநினையானேல் தன்னினைந்து நைவேற்கோர்
மீனாயகொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ
தேன்வாயவரிவண்டே திருவாலிநகராளும்
ஆனாயற்கென்னுறுநோ யறியச்சென்றுரையாயே. ௪.

ப - ரை.— தானாக - அவன்தானாகவே, நினையானேல் - தன்னுடைமையான வென்னை நினையாதொழிலும், தன்னினைந்து - தரிக்கைக்குஹேதுவாகிய அவனையே நினைத்துக்கொண்டு, நைவேற்கு - நையுமென்னை, ஓர்மீனாயகொடிநெடுவேள் - அத்விதீய மகரத்வஜனான மந்மதன், வலிசெய்ய - பீடிக்கும்படி, மெலிவேனோ - நான்இளைத்துப்போவேனோ; தேன்வாய - இனியபேச்சையுடைய, வரிவண்டே - ரேகை[யு சிறந்தவண்டே!, திருவாலிநகர் ஆளும் - திருவாலியென்னும் திவ்யதேசத்திலே வர்த்திக்கிற, ஆனாயற்கு - ஸ்ரீக்ருஷ்ணனாகத்திருவவதரித்த ஸர்வேச்வரனுக்கு, என் உறு நோய் - மேலெழப்போமதன்றிக்கே என்மர்மாந்தமான நோவை, சென்று - நீபோய், அறியஉரையாய் - அவனறியும்படி சொல்லவேணும் என்று பின்னுமவ்வண்டையே தூதுவிடுகிறாள். ... ... ... ... (௪)

---

கூர்வாயசிறுகுருகே. (குறிப்பு) அவன்நினைவை யறிந்து சொல்லவேணும். ... ... ... ... ௫.

---

(கூர்வாயசிறுகுருகே) கூரிய வாயலகையுடைய சிறுகுருகேயென்றுதல்; அன்றிக்கே, அறுதிப்பாடுடைத்தான வார்த்தைசொல்லவல்லகுருகேயென்றுதல். ராஜபுத்ரர்களைக்கண்டருசி நாலுமூன்று[உ]யோஜனை ஓடிப்போன மஹாராஜர்வந்துகிட்டி, "ஏக0ஜூவெ0ஸூவெதுநௌ" என்று நிற்கும்படிக்கீடாகவிறே வார்த்தைசொல்லிற்று.

(குறிப்பறிந்துகூறாயே) அவன்கருத்தறிந்து வந்து எனக்குச்சொல்லென்றுதல்; நாணற்றமையாலே கண்ணழிந்துசுழலையிட்டுச்சொன்னவற்றையெல்லாம் அங்குச்சொல்லாதே, அவன்பரிக்கும்படி அளவறிந்து வார்த்தைசொல்லென்றுமாம். மிகச்சொல்லிலவனைக்கிடையாது, அவன்கருத்தையறிந்துவந்து சொல்லென்றதுக்குக் கருத்தென்னென்னில்; நம்முடைமையையறிவித்தால் "நமக்குத்தலைவேணும்" என்றானாகில் நம்மாற்றமை பாராதேயாகிலும் நாம்ஜீவித்துக்கிடக்க, வேண்டா என்றானாகில் நாம்முடிந்துபிழைக்கும்படி. ... ௫

நாலாம்பாட்டு.— (தானாகநினையானேல்) "வேம்பு" என்பாரைப்போலே.

---

அறுதப்பாடுடைத்தான - நிஷ்கர்ஷைய்யியாலுண்டான. ... ௫.

நாலாம்பாட்டு.—(தானாகவித்யாதி.) கீழ்ப்பாட்டில் குருகைக்குறித்து "கூறாய்" என்றவாறே வண்டானது வந்து முகங்காட்டி "நீயெங்களைத் தூதுவிட நாங்கள் மெய்மறந்திருந்தோமல்லோம், அவன் உன்படியறிந்துவைத்தும் இப்பாடுபடவிட்டு நினையாதிருந்தான், நாம் போனாலும் பற்கடித்திருந்தால் என்செய்வோமென்றிருந்தோமித்தனை" என்று இனிதாகச்சொல்லிக்கொண்டுவர, அத்தைப்பார்த்து வார்த்தை சொல்லுகிறாளென்று ஸங்கதி.

தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேம்பித்யாதி;) "வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது" என்றவிடத்தில், அவன்குற்றத்தையிட்டு வேம்பென்று குறைசொன்னாப்போலே அவன் தன்னை நினையாதிருக்கை குற்றமென்று அவனுக்குக் குறைசொல்லுகிறாளென்று கருத்து.

நாலாம்பாட்டு. (தானுகவித்யாதி) நஞ்ஜீயருடைய நோவிலே பெற்றி அறியப்புகுந்து, "இங்குத்தைக்குவேண்டியிருக்கிறதென்?" என்று கேட்க; "* தூவிரியமலருழக்கிப்பாட்டுக் கேட்கவும், பெருமாளெழுந்தருளப் பின்னும் முன்னும் சுற்றிலேவந்து ஸேவிக்கவேண்டியிராநின்றேன்" என்றருளிச்செய்தருளினார்; அப்போதே பெருமாளுக்குச் சென்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் ஜீயர்க்கருளப் பாடிட்டு * தூவிரியமலருழக்கி கேளாநிற்க, "மீனையகொடிநெடுவேள்வலிசெய்யமெலிவேனோ" என்கிறவளவிலே வந்தவாறே, "காமஶரங்களாலே ஏவுண்பதற்கு முன்னே வாராவிட்டாலும் பட்டபுண் பரிஹரிக்கவாகிலும் வம்தாலாகாதே" என்றருளிச்செய்தார். (தானுகவித்யாதி) தானும்படி செய்யானாகில், தானப்படி செய்யானாகிலென்றபடி. அப்படிசெய்யாதபோது யாது வர்ஷியாதே. (தன்னினைந்தித்யாதி) தன்னைநினைந்துஶிதிலையாகிற வென்னை ஒருமகரத்வஜன் நலிய மெலியக்[illegible]வேனோ.

---

உடைமையை அவனாக நினைக்குமது கிடையாதாகில், முறைசெய்யானாகில். அவனுக்கு ஆஶ்ரிதரை நினையாமை ஸ்வாபாவிகமாகில்; தன்ஸத்தையுண்டாகைக்கிடாக நினையானாகிலென்றுமாம். (தன்னினைந்து நைவேற்கு) நாமவனைப்போலே யாகமாட்டோமே; நாமும் நினையாமைக் கொருநெஞ்சுபடைக்கப் பெற்றிலோம். பெறவுமுபாயத் தவிரவுமாயிருக்கும் விஷயமாகிலிறே அநுஸந்தித்தால் யாதிருக்கலாவது; இதரவிஜாதீயமாயிருக்கும் விஷயமானாலே அநுஸந்தித்தவநேரம் நோவுபடுமத்தனையிறே. (ஓர்மீனாயகொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ) தன்னையாசைப்பட்டு நைகிறவென்னை மகரத்வஜனோ நலிவான். அவஶ்யம்நாங்கள் நோவுபடுகை தவிரோமாகில், "கருளக்கொடியொன்றுடையீர்" என்கிற தாம் நோவுபடுத்த நோவுபட்டாலென்செய்யவேணும். ஜீயர்வார்த்தையை நினைப்பது.

---

ஸ்வாபதேஶம் (உடைமையையித்யாதி.) தானுகவே நினைக்கை முறை, அது செய்யாமல் போனானாகிலென்று நிர்வஹித்தருளிச்செய்து, தானுகையாவதுவென்றும் தானுகைக்காகவென்றும் ஸ்வாபதேஶம் விவக்ஷித்து, தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுக்கித்யாதிவாக்யத்வயத்தாலே;) ஸத்தையுண்டாகைக்காகநினைக்கவேணுமது செய்யாமற்போனானாகிலென்றும், ஸத்தையுண்டாகைக்காக நினையாதேயிருந்தானாகிலென்றும், மூன்றாம் தாத்பர்யத்தை யிரண்டுவிதமாக யோஜித்துக்கொள்வது. நினையாதவனை நாம் நினைப்பானென்னென்ன (நாமித்யாதி.) மாட்டாமைக்கு ஹேதுவென்னென்ன (நாமுமித்யாதி.) ஒரு நெஞ்சு - பேர்சொல்லப்போகாத கல்நெஞ்சு. நினைத்தால் நைவானென்னென்ன வருளிச்செய்கிறார் (பெறவுமித்யாதிவாக்யத்வயத்தாலே.) விரஹிணிகளைமதனன்வலிசெய்யுமது லோகப்ரஸித்தமாயிருக்க, "மெலிவேனோ" என்று க்லேஶிக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி;) யத்வா "வேள்வலிசெய்ய" என்னவமைந்திருக்க, "ஓர்மீனாய கொடி" என்றதுக்குக் கருத்தாகவுமாம். ஜீயர்வார்த்தை-ப்ரவேஶத்தில்வார்த்தை.

அஞ்சாம்பாட்டு. (வாளாயவித்யாதி) வாள்போன்ற கண்கள் துளிக்க, மீடீ-வானமுலேகள் பொன்பூக்க,

(வாளாயகண்பனிப்ப) அத்தலேயித்தலேயானபடி. எதிர்த்தலேயிலே காணக்கடவ கண்ணநீரிறே இவள்கண்ணிலே காண்கிறது!. பிறரைத் தோற்பிக்கைக்கீடான பரிகரமுண்டாயிருக்கக்செய்தேதான் இப்படிபட் டது!. கையிலே ஆயுதமிருக்க முடிந்து கிடப்பாரைப்போலே. அவன் போகவொருப்பட்ட ஸமயத்திலே, "போகாதேகொள்" என்று கண் ணாலே விலங்கிட்டு அநுபவிக்கலாயிருக்க, லஜ்ஜையாலே கவிழ்ந்திரு ந்து"கெட்டேன்!" என்கிருள்.அப்போது அவனைக்கடாக்ஷித்துவிட்டே ளுகில் அவன்றன் தானுவிடவிருக்கலாய்த்தே!. (வாளாயகண்பனிப்ப) ஓராளுமொருநோக்கும்நேரான கண்கள் படு மெலிவரவே!. பழியாய் வைத்து உகிர்மூறிந்தேன் என்கிருள். திருத்தாயார் சொல்லுமாப் போலே சொன்னுளே தன்னைத்தானே; எல்லார்க்கு முள்ளது சொல்ல லாயிருக்குமிறே. அவன்றன் "இதொருகண்ணழகே!" என்று[மிரு] சொல்லக்கேட்டிருக்குமே!. அத்தலேக்குறுப்பான ஸ்வஸ்வருபமும் ப்ராப்யாஞர்மதமாயிருக்குமிறே. (மென்முலேகள் பொன்னரும்ப) முலேக்கு காரியம் ஸ்வபாவமாயிருக்கச்செய்தேயும், மென்முலே என் கிறது – விரஹஸஹமல்லாதபடியாலே. விரஹஸஹமல்லாத முலேகள் பயலேமைபூக்க.

(வாளாயகண்பனிப்ப மென்முலேகள் பொன்னரும்ப) தன்னைக் கண்டுகொண்டிருக்க வமைந்திருக்கிறதுகாணு மிவள்தனக்கும். இவள்தனக்குமமையும், அவன்றனக்குமமையும். ✽ ஸௌமித்ரே ஹஸ்தி: இறே. [ஆஹ்லாதஜலதநேத்ராம்பஸா:] ஸம்வஸ்ரூ ஸம் ஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே குளிர்ந்த கண்ணநீருந்தானுமாயிருக்கை. [புளகீக்ருத மாத்ரவாந்]த்ரிஸரமும் பஞ்சஸரமுமிட்டாப்போலே. [பராஹ்ருஷ்டவிஷ்டா:]

வ்யாக்யாதாவினுடைய ஈடுபாடு (அத்தலேயித்யாதிவாக்யத்வயம்.) தாதபர்யம் (பிறரையித்யாதி.) கண்ணுனது ஆயுதமாகிற வழியென்னென்ன வருளிச்செய்கி ருர் (அவனித்யாதி.) ஹார்தபாவமருளிச்செய்கிருர் (அப்போதித்யாதி.) ஸங்கதார் யும் (ஓராளுமித்யாதி.) "குவளையங்கண்ணி" "பனிநெடுங்கண்ணீர்ததும்ப" என்று திருத்தாயார் சொன்னுப்போலே என்று வ்யாக்யாதா அருளிச்செய்கிருர் (திருத் தாயாரித்யாதி.) தாய்சொல்லிற்றைத் தான் சொல்லலாமோவென்ன வருளிச்செ ய்கிருர்(எல்லார்க்குமித்யாதி.) தன் கண்ணழகு தான்கண்டபடி யெங்ஙனேயென்ன (அவன்றனித்யாதி.) தான்சொல்லப்போமோ என்றதுக்குப்பரிஹாராந்தரம் (அத் தலேக்கித்யாதி.)

"பனிப்ப" என்றும் "அரும்ப" என்றும் சொன்னத்தால் பலித்த அழகினை ல்லேநிலத்தை யருளிச்செய்கிருர் (தன்னையித்யாதி.)ஸம்வஸ்ரூஸம்வபரருடைய வடிவு வைத்தகண வாங்கவொண்ணுதிருக்குமென்கைக்கு ப்ரமாண மருளிச்செய்கிருர் (ஸௌமித்ரேத்யாதி. ஆஹ்லாதஜலதநேத்ராம்பஸா: - விச்லேஷிக்க விரண்டு பார்ச்வத்திலும் விழுகையாலும் புளகீக்ருதமாத்ரவானுனென்று விவக்ஷித்து, ஹ்ருஷ்டாஞமரு ளிச்செய்கிருர்(த்ரிஸரமுமித்யாதி.)முத்துத்தார்வடங்கள் குளிர்த்தியால் மயிர்கூச் சுண்டாகப் பண்ணுமென்று திருவுள்ளம்.

(ஓர்மண்ணளித்யாதி†) ஓரடியாலே பூமியையளந்த திருவடிகளையுடையவனே. (வரையெடுத்ததோளாளா) *குடந்தையெங்கோவலனிறே. * குன்றமெடுத்தாநிரைகாத்தவனிறே.

(ஓ! மண்ணளந்ததாளாளா ஆரபேக்ஷிக்கத்தான் நீ அன்றெல்லார் தலைமேலும் திருவடிகளை வைத்தது !. ஆர் கண்ணில் கண்ணநீரும் ஆறுடம்பின் வைவர்ண்யமும் கண்டுதான் திருவடிகளைக்கொண்டுவந்து வைத்தது !. உன்னைப்பெறாதே விவர்ணமாயிருக்கிற இம்முலைமேலே திருவடிகளை வைத்தாலாகாதோ !.

(தண்குடந்தைநகராளா) அதுக்குப்பிற்பாடாரும் பிறவாமைக்கு வந்திருக்கிற தன்னேற்றந்தான் பெறலாகாதோ !. (தண்குடந்தைநகராளா) "இன்னமெல்லை நடப்பித்துக்கொள்வாரார் ஏறு முன்னேடா" என்று ச்ரமஹரமான திருக்குடந்தையிலேவந்து சாய்ந்தபடி.

(வரையெடுத்த தோளாளா) அங்ஙன் "பிற்பாடர்" என்கிற பொதுவன்றிக்கே, விசேஷித்து என்பருவத்திற்பெண்களையுமிடையரையும் ரக்ஷித்தவனன்றோ!. (வரையெடுத்ததோளாளா) பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே தொலையப்புக, மலையையெடுத்துப் பரிஹரித்தாயாய்த்து. ஆச்ரிதர்க்குப்பணிசெய்த தழும்பாயாய்த்துத் திருமேனியடையக்கிடப்பது; "தழும்பிருந்த" இத்யாதி. "நம்மைச்சிலர் கட்டுண்ணையாவதென், நாம் சிலர்க்குக் கட்டுண்கையாவதென். இதுபின்னை நாடறிகையாவதென்" என்று, அத்தை மறைக்கப்புக்கான் ; ஒருதழும்பாகிலன்றோ உன்னால் மறைக்கலாவது, உன்னுடம்படங்கலும் ஆச்ரிதர்க்காகக் காரியம்செய்தத்தால் வந்த தழும்பன்றோ என்கிறாள் [தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவாமங்கை] அழகிய திருக்கையானது, *ஜ்யாகிணாங்கரூமாய்க்கிடக்கும்; அழகிய திருக்கையானது. ஸ்ரீசார்ங்கத்தைப்பிடிக்கையால்வந்ததழும்பைச்சுமந்தது; திருவடிகளானவை, சகடாஸுரநிரஸநம்பண்ணி அத்தால்வந்த தழும்பைச் சுமந்தது ; இனி, *விங்கோதவண்ணர்விரல் செய்ததென்னென்றால் [பூங்கோதையாளித்யாதி] கிளர்த்தியையுடைத்தான ஓதம்போலேயிருந்துள்ள வடிவையுடையரானவருடைய திருவிரலானது, பிராட்டிக்காகவிறே சிறுக்கனுக்கு விரோதியான ஹிரண்யனைப்பிளந்து போகட்டது ; அப்படிப்பட்டவனுங்கூட, விளைவதறியாதே "இதென்னாகப் புகுகிறதோ" என்று அஞ்சும்படி ஹிரண்யன் மார்வைப்பிளந்து போகட்ட தழும்பிருந்த. உன்னையழித்து ஆச்ரிதர்க்காகப்பார்த்தநீ.

"ஓ!" என்றவிஷாதத்தினபடியை விவரிக்கிறார் (ஆர்த்யாதி.)

உட்கருத்தையருளிச்செய்த, மேற்படித்தோட்டை ஸமஹிவ்யாஹாரதாத்பர்யபூர்வகம் ஸாஷார்யமருளிச்செய்கிறார் (இன்னமித்யாதி.)

வரையெடுத்தமை தோளாலே யாயிருக்க, "தோளாளா" என்று விசேஷிக்கையால், திருமேனியெல்லாம் ஆச்ரிதர்க்காகச் செய்தசெயலில் தழும்பேறினமை தோற்றுகையாலே விசேஷித்தாரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஆச்ரிதர்க்கித்யாதி.) எடுத்தபாசுரத்துக்குவ்யாக்யாநம் பண்ணுவதாகக் கீழ்ப்பாட்டோடு ஸங்கதிகாட்டுகிறார் (நம்மையித்யாதி.)

† "ஓர்மண்ணளந்த" என்று நஞ்சீயர்படியில் பாடம்.

மூ.—தாராயதண்டுளவ வண்டுழுதவரைமார்பன்
போரானைகொம்பொசித்த புட்பாகனென்னம்மான்
தேராரும்நெடுவீதித்திருவாலிநகராளும்
காராயனென்னுடைய கனவளையுங்கவர்வானே. ௬.

ப - ரை.— வண்டு - வண்டுகளானவை, தாராய - மாலிகையாகிய, தண்துளபம் - திருத்துழாயிலுள்ள, தேனும் சுண்ணமும் வாஸனையுங் கொண்டு, உழுத - சேறுக்கின, வரைமார்பன்-அகன்றதிருமார்பையுடையனாய், போர்ஆனை - யுத்தோத்முகமான குவலயாபீடத்தின், கொம்புஒசித்த - தந்தத்தைமுறித்தவனாய், புள்பாகன - பெரியதிருவடியை வாஹநமாக உடையனாய், என்அம்மான் - எனக்கு ஸ்வாமியானவனாய், தேர்ஆரும் - ரதங்களையுடைத்தாய், நெடு - தனக்கும் தன்பரிகாரத்துக்கு மினைமெழுந்தருளப்போதுமான, வீதி - திருவீதியையுடைய, திருவாலிநகர்ஆளும்-திருவாலிநகரத்தில் நித்யவாஸம்பண்ணுகிறவனாய், காராயன் -ஸ்ரமஹாமன திருமேனியையுடைய ஸ்ரீக்ர்ஷ்ணனுமான ஸர்வேஸ்வரன், என்னுடைய-தன்னையே நினைந்து நையுமடியேனுடைய, கனவளையும் - கையிலிட்டபொன்வளைகளையும், கவர்வானே - அபஹரியாநிற்பனே! என்று தன்னிலே தான் நொந்து படுகிறாள். ... ... ... ... ... ... (௬)

(என்றனக்கித்யாதி) உன்னையன்றித் துணையில்லா வெனக்குத் துணையாகாயே. ... ... ... ... ... ௫.

ஆறும்பாட்டு. (நாராயவித்யாதி) துளவத்தாரில் தாதும்சுண்ணமும் தேனுலே சேறாய் வண்டுகள்புக்கு உழக்கியுழுத வரைமார்வன்.

(என்றனக்கோர் துணையாளனாகாயே) அந்நொய்யமோவர்யநதிரியைப் பொகட்டு,என்னுற்றுமையிலே பாதியைச்சுமக்கவல்லையே !. (துணையாளனாகாயே) என்றது - ஆகவொண்ணுமென்றபடி. ... ௫.

ஆறும்பாட்டு. —(தாராயவித்யாதி, வரைமார்பன்) தனக்கஸாயாரணமான திருத்துழாய்மாலையானது மடைவெள்ளமிட்டுச் சேறு யாய்த்துத் திருமார்விருப்பது. திருமார்விலசாத்தின திருத்துழாய்மாலையில் தேனும் சுண்ணமும் பரிமளமும் புறப்பட்டுத் திருமார்வடங்கலும் வண்டலிட்டு வண்டுகளுழுது சேறுசெய்து கிடக்குமாய்த்து. இனி இவள் பொன்னரும்பின முலைகளைக் கொண்டுவந்து நடுகைக்கு நல்லவளாய்த்து ; இளமுலைகளைக் கொண்டுபோய் நடுமத்தனை.

அந்நொய்ய - அந்தநொய்ப்பமான, தன்நோயைப்பார்த்தால் மலை ஸூக்ஷ்மமென்னலாமென்று கருத்து. பாதியென்றது - "துணை" என்றதைப்பற்ற. ... ௫.

ஆறும்பாட்டு.— (தாரித்யாதி.) கீழ்ப்பாட்டில் - "துணையாளனாகாயே" என்று முன்னிலையாகச் சொல்லாநிற்கச்செய்தேயும், அது உருவுவெளிப்பாடு மாத்ரமாகையாலே கைவளைகழலக்கண்டபடியாலே, முன்னிருந்தவன்கழற்றிக்கொண்டு மறைந்தானென்று தன்னிலே தான்நொந்து படுகிறாளென்று ஸங்கதி.

"தண்டுளவவண்டு" என்னவமைந்திருக்க, "தாராய" என்றத்தாலே - "மதுவிரிதுழாய்முடி" என்னுங்கிருபகமாயிருக்குமென்றருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி.) சேறுகைக்கு மண்வேண்டாவோவென்னவருளிச்செய்கிறார் (திருமார்விலித்யாதி.)

(போரானையித்யாதி) யுத்யோந்முகமான குவலயாபீடத்தின் கொம்பை முறித்த மருகவாஹநன்,என்ஸ்வாமி. (தேராருமித்யாதி)தேரும் பரிகரமும்வரும்போது நெருக்குப்படாமல் வரலாம்படியான பெரிய திரு வீதியையுடைய திருவாலிநகரை ஆளும் பெரிய க்ருஷ்ணன்[ஞ] என்னுடைய பொன்வளையும் கொள்வானே. கனம் – பொன். சா.

ஆசையில்லாதாரே வேணும்போலேகாணும் மார்வுக்கு ; எப்போது மொக்க அணைக்கலாம்படியாய்த்து அம்மார்விருப்பது.

(போரானைகொம்பொசித்த) யுத்யோந்முகமான குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந முறித்தவன் வருமிடத்தில் வழியில் ப்ரதிபந்தகந்தானுண்டோ. (புட்பாகன்) பெரியதிருவடியை வாஹநமாகவுடையவன், விரோதிநிரஸந ஸ்வபாவனுமாய், தான் வரும்போதே தூரத்திலேகண்டு விடாய்தீரலாம்படியான பரிகரத்தை யுடையவன். (என்னம்மான்) ஶோளேந்த்ரஸிம்ஹனிலிருப்பைக் காட்டியாய்த்து இவளை அநந்யார்ஹையாக்கிற்று.

(தேராரும்நெடுவீதி) தனக்கும் தன் பரிகரத்துக்கும் இணைந்து வருகைக்குவேண்டும் பரப்புப்போருமாய்த்துத் திருவீதி. * தன்னை ராயிரம் பிள்ளைகளோடே வரலாமாய்த்து. (காராயன்) ஶ்யாமஹாரமான வடிவைக்காட்டி பசுலக்ஷ்ம்குடியிற் பெண்கள் வளை கவர்ந்தவன்,என் கையில் வளைபெறுவிடில் உண்டதுருக்காட்டானுயிராநின்றான். ஸமகாலத்தில் பிறவாதார் வளையும் கொள்ளவேணுமோ. இவனுக்கு ஒருராக வளைகொண்டதுவும் உண்டதுருக்காட்டுகிறதில்லைகாணும் இவள் கையில் வளை ரக்ஷிக்கில் !. ... ... ... சா.

இளமுலைநமெத்தனையானுல் நடலாகாதோ, "வளை கவர்வானே" என்று நோவுபட விடுவானென்னென்னவருளிச்செய்கிறார் (ஆசையித்யாதி;)இதுவாடீ. ஆசையுடையனுனலாகாதோ, ஆசையில்லாதாரேவேணுமோ என்று ப்வநி ; யத்வா, ஸம்ஶ்லேஷிக்கவேணு மென்னுமாசையில்லாதவண்டேயாகவேணுமோ என்றும் ப்வநியாகவுமாம்.

"புட்பாகன்" என்றபதஸமபிவ்யாஹாரதாத்பர்யம் (ஶோளேந்த்ரேத்யாதி;) ஶ்ரீஶத்ருஞ்ஜயன் என்றாப்போலே, ஶோளேந்த்ரஸிம்ஹனென்று - நம்பெருமாளானைக்குத் திருநாமம். "மஜேஶமஹாதாயாதும்" என்ற-அயோத்யாஜநங்களை யீடுபடுத்தினப்போலே, கோயில் பெருமாளும் அரங்கன் திருமுற்றத்தடியாரை யீடுபடுத்துவர்; அப்படியே இவளும் பெரியதிருவடிமேலிருப்பிலீடுபட்டாளென்றகருத்து.

"ஆயன்" என்றபதத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் ( தன்னைரித்யாதி. ) "வளையும்" என்ற உகாரதாத்பர்யம் (ஸமகாலத்திலித்யாதி.) வ்யாக்யாதாவினீடுபாடு (இவனுக்கித்யாதி.) ... ... ... ... ... சா.

ஏழாம்பாட்டு.—(சொண்டித்யாதி.)கீழ்ப்பாட்டிலே"கனவளையும் கவர்வானே" என்று தன்னிலேநொந்தவாறே, கழற்றிக்கொண்டுபோனவளையைக் குலுக்கிக்கொண்டு முன்னேதோற்ற, அவனைப்பார்த்து, என் வளைக்கு நான் கடவளல்லேனோ என்று பறிக்கத்துடங்குகிறாளென்று ஸங்கதி.

மூ.—கொண்டரவத்திரையுலவுகுரைகடல்மேல்குலவரைபோல்
பண்டரவினணைக்கிடந்து பாரளந்தபண்பாளா
வண்டமரும் வளர்பொழில்சூழ்வயலாலிமைந்தா என்
கண்டுயில் நீகொண்டாய்க்கென்கனவளையுங்கடவேனோ. ௭.

ப - ரை.—பண்டு - மஹாபலிமுதலானவர்களால் இப்பூமிக்கு அநர்த்தமுண்டாவதற்கு முன்னே, அரவம்திரைஉலவு - கோஷத்தையும் அலைகளையுமுடைய, குரைகடல்மேல் - பரந்ததிருப்பாற்கடலில், அரவின் அணை-திருவநந்தாழ்வான்மேலே, குலவரைபோல்-ஓர்பெரிய பர்வதம் சாய்ந்திருந்தாப்போல், கொண்டுகிடந்து- இத்தேசம் ஆஸ்ரித ரக்ஷணத்துக்கு ஏகாந்தஸ்தலமென்று திருவுள்ளத்திற்கொண்டு கண்வளர்ந்தருளி, பின்பு அம்மஹாபலியால் அநர்த்தம் விளைந்தவாறே, பாரளந்த பண்பாளா - பூமியை அளந்து அவனுண்டவுலகைமீட்டு இந்திரனுக்குக்கொடுத்த நீர்மையையுடையவனே, வண்டு அமரும் வளர்பொழில்சூழ் - வண்டுகள்படிந்து ஓங்கினமரச்சோலைசூழ்ந்த, வயல் - கழனியையுடைய, ஆலி-திருவாலியிலிருக்கிற, மைந்தா - யுவாவானவனே, என்கண்துயில் - என் தூக்கத்தை, நீகொண்டாய்க்கு- முற்றுமபஹரித்தவுனக்கு, என் கனவளையும்-என்கையிலுள்ளபொன்வளையும், கடவேனோ - இழக்கக்கடவேனோ! என்று அவன்விரும்பப் புக்கவாறே என்னதென்று ஒருதலை தானும்பற்றுகிறாள். ... ... ... ... (௭)

ஏழாம்பாட்டு. (கொண்டரவித்யாதி) ஆரவாரித்துக்கொண்டு திரைகள் ஸஞ்சரிக்கிற பரந்த கடல். குரை-பரப்பு. (குலவரையித்[உயாதி) பெரியவரைபோலேயிருக்கிற திருவநந்தாழ்வான்மேலே பண்டு கண்வளர்ந்து பூமியையளந்த ஸ்வபாவத்தையுடையவனே. (வண்டித்யாதி) வண்டுகளாலே மொய்த்து வளரப்பட்டபொழிலாலே சூழப்பட்ட வயலாலிமைந்தா!,

ஏழாம்பாட்டு.— (கொண்டு) ரக்ஷணத்துக்குப்பாங்காய் ஆர்த்தருடைய கூக்குரல் கேட்கும் தேசமிதுவென்று திருவுள்ளத்திலே கொண்டு. இவ்விடம் ஆஸ்ரிதரக்ஷணம் பண்ணுகைக்கு ஏகாந்தமான ஸ்தலமென்று திருவுள்ளத்திலே கொண்டு. ஆரவாரத்தையுடைத்தாய்-கோஷியாநிற்பதாய், திரைகளானவை ஸஞ்சரியாநிற்பதாய், பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே ஒருகுலகிரிசாய்ந்தாப்போலே யாய்த்துத் திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறபடி. குரையென்று - பரப்புக்குப்பேர். அக்கடல் பாழ்தீரும்படி ஒருகுலகிரிசாய்ந்தாப்போலே. (பண்டு)மஹாபலிபோல்வாரால் பூமிநோவுபடுவதற்கு முன்பாய்த்து அப்படுக்கையில் கண்ணுறங்குவது. (பாரளந்த பண்பாளா) படுக்கையை விட்டுவந்து இத்தையடைய அளந்து கொண்டானாய்த்து. ஆக, மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியைமீட்டு இந்த்ரனுக்குக்கொடுத்த நீர்மையையுடையவனே.

(வண்டமருமித்யாதி) அந்நீர்மைக்குப் பிற்பாடரானருமிழவாமைக்காகவாய்த்துத் திருவாலியிலே வந்துநிற்கிறது. பரிமளம்படிந்தாப்போலேவண்டுகள்படிந்து மதுபானம்பண்ணுநின்றுள்ளஓங்கினபொழிலாலே சூழப்பட்டவயலையுடைத்தான திருவாலியிலே நிற்கிறவனே.

விவரணம் (இவ்விடமித்யாதி.) "அரவம்" என்றதினர்த்தம் (ஆரவாரத்தையென்றது.)

மூ.—குயிலாலும் வளர்பொழில்சூழ்தண்குடந்தைக்குடமாடி!
துயிலாதகண்ணிணையேன் நின்னினைந்து துயர்வேனோ;
முயலாலுமிளமதிக்கேவளையிழந்தேற்கிதுநடுவே
வயலாலிமணவாளா கொள்வாயோமணிநிறமே. ௮.

ப - ரை.—குயில ஆலும் - மதுவுண்டு களித்துக் குயில்கள் ஆலாநின்றுள்ள, வளர்பொழில் சூழ் - ஓங்கின சோலைசூழ்ந்த, தண்குடந்தை - குளிர்ந்த திருக்குடந்தையில்வர்த்தியாநிற்கிற, குடமாடி - குடக்கூத்தாடினவனே, துயிலாத - உறக்கங்கொள்ளாத, கண்ணிணையேன் - கண்ணிணையுடைய அடியேன், நின்னினைந்து - உன்னையே நினைத்துக்கொண்டு, துயர்வேனோ - துக்கிக்கக்கடவேனோ?; முயலாலும் இளமதிக்கே - தன்னுடம்பில் துள்ளுகிறமுயலைப்போக்கமாட்டாமலும் பருவம் நிரம்பாமலுமிருக்கும் சந்த்ரனுக்கே, வளையிழந்தேற்கு - வளைகளையிழந்தவடியேனுக்கு, வயலாலிமணவாளா - கழனிசூழ்ந்ததிருவாலியிலுள்ள ஸ்வாமியே, இதுநடுவே - இப்பாதகவர்க்கத்தின்நடுவே, நீயும்வந்து, மணிநிறமேகொள்வாயோ - அழகியநிறத்தையும் கைக்கொண்டு அனபத்தைப்பண்ணுவாயோ! என்கிறாள். (௮)

என்காண்டியிலைக் கொண்டவுனக்கு என்பொன்வளையும் கடவேனோ. எ.

திருப்பாற்கடலில் நின்றும் ஸ்ரீவாமநனாயவதரித்து மஹாபலியை யகப்படுத்திக்கொண்டாப்போலேயாய்த்து திருவாலியிலேவந்துநிற்கிற தன்யௌவநத்தைக்காட்டி யிவரையகப்படுத்தினபடி. (என்காண்டியில் நீகொண்டாய்க்கு) திருவாலியிலே உத்தேஶ்யவஸ்து ஸுலபமாய்த்தென்றவாறே, கண்ணுறக்கம் குடிபோய்த்தாய்த்து. (என்வளையும்கடவேனோ) என்னுடம்பிலுள்ளது வேணுமாகில்கொள்ளுகிறாய், நான்பொன்னிட்டுக் கொண்ட வளையிலென்ன ப்ராப்தியுண்டு. அவனும் பொன்கொடுத்திறே கொண்டுபோகிறது. இவனுக்கும் இவளுடம்பிலுள்ளது கொள்ளும்போது இவள் (௧) மேலெழுத்திடவேண்டாகாணும். ஸ்வாபாவிகமானத்தோடு ஔபாதிகமானத்தோடு வாசியின்றிக்கே, என்னதென்னுமித்தனையோநீகொள்ளைக்கு வேண்டுவது. அவனித்தை விரும்பப்புக்கவாறே, என்னது என்று ஒருதலை தானும் பற்றுகிறாள். ... ... ... ... எ.

உடம்பிலுள்ளது - நித்ரை. கடவனல்லேனோ என்று பாவதார்யம் விவக்ஷிதமாய் [அருளிச்செய்கிறார் (நானித்யாதி.) ஸ்த்ரீதநமான பொன்னிட்டுக்கொண்டவளையை அவன் கொள்ளக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அவனுமித்யாதி.) பொன்கொடுத்து - வைவர்ண்யத்தைக்கொடுத்து. ஆகில், இவளிசைவு வேண்டாவோவென்ன (இவனுக்குமித்யாதி;) ப்ராப்தனாகையால் அவன் பொன்னிட்டே அவள் கைவளையைக்கொண்டானென்று கருத்து. அவனப்படி கைக்கொண்டால இவள் என்னது என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி.) எ.

(௧) மேலெழுத்திடுகை - ஸம்மதிக்கையென்றபடி. "மேலெழுத்து வேண்டாகாணும்" என்று சில வ்யாக்யாந ஸ்ரீகோஶங்களில்பாடம்; அநுகுணமாக, "மேலெழுந்த வளையைக் கொள்ளவேண்டுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவனுக்குமித்யாதி வாக்யத்வயத்தாலே.)மேலெழுந்தது வேண்டாகாணுமென்றது - ஸாமாந்யமானதாகாது, ஸாமாந்யமானவளையாகவேணுமென்றபடி" என்று அரும்பதார்த்தம்.

மூ.—நிலையாளாநின்வணங்க † வேண்டாயேயாகிலு மென்
முலையாளவொருநாளுன்னகலத்தாலாளாயே
சிலையாளா மரமெய்ததிறலாளா திருமெய்ய
மலையாளா நீயாளவளையாளமாட்டோமே. ௬.

ப - ரை.—சிலைஆளா - ஸ்ரீகோதண்டக்கையனே,மரம்எய்ததிறல்ஆளா - மராமரம் வேரோடுவிழக் கணைவிடவல்லவனே,திருமெய்யமலைஆளா- திருமெய்யத்தில் கண்வளருமவனே,நிலையாளாநின்வணங்க-நான் அநந்யப்ரயோஜனையா யுன்னை ஆஸ்ரயிக்க,வேண்டாயேஆயினும்-வேண்டேனென்றிருந்தாயேயாகிலும்,என்முலையாள-என்முலைகளாட்செய்யும்படி, ஒருநாள்-ஒருநாளாகிலும், உன்அகலத்தால் ஆளாய்-உன் அகன்றமார்பாலணைத்து என்னைநிர்வஹிக்கவேணும் ; நீஆள - நீபரிக்ரஹித்தபின், வளையாளமாட்டோமே - வளைகளைநிர்வஹிக்கஸக்திதேடமாட்டோமே. (௬)

( முயலாலுமித்யாதி ) முசலகவாயிருக்கிற இளம்பிறைக்கு வளையிழந்திருக்க மதிகேடனாயிறே யிவள்வளையைவாங்கிற்று. (இதனடுவே) இவ்வாயகவர்மத்தின் நடுவே. (வயலாலிமணவாளா) ஆலிங்கநபுரியிலே நீவந்திருக்கிறது என்னுடைய அழகிய நிறத்தைக் கொள்கைக்கோ. ... ... ... ... ... அ.

(முயலாலுமித்யாதி) நீ கைதொடனாய் நலியவேண்டும்படியோ என் உபையிருக்கிறபடி !. தன்கறைகழுவவும் மாட்டாதே தன்குறை பரிஹரிக்கவும்மாட்டாத சந்த்ரனுக்கு வளையிழந்தன்றோ நானிருக்கிறது. தன்னுடம்பிலே துள்ளுகிற முயலைப்போக்கவும் மாட்டாதே, பருவம்நிரம்பாதே யிருக்கிறவனுக்கு வளையிழந்தேற்கு. (இதுநடுவேயித்யாதி) விஹ்ருதியையிட்டு நலிகையன்றிக்கே, நீரும்தூசியேறப்புக்கீரோ ; —போரிலே த்வந்த்வயுத்தம்பண்ணாநிற்கச்செய்தே நடுவே வந்து பொருவாரைப்போலே. விடுநகமும் சம்மட்டியுமிட்டு நலியாநிற்க“அதுபோராது” என்று உடையவன் தானே நலியுமாப்போலே, விஹ்ருதியையிட்டு நலிகைதவிர்ந்து நீதானே கைதொடனாய் நலியப்பார்த்தாயோ. ( கொள்வாயோ மணிநிறமே ) அவன் கூடவிருந்தபோது, “இதொருநிறமே !” என்று வாய்புலத்தக்கேட்டிருக்குமே; அல்லது, தன்வடிவைத் தானே ஸ்லாகிக்கிறாளன்றே. ... அ.

“இளமதிக்கே” என்கிற அவதாரணதாத்பர்யமருளிச்செய்கிறார் (நீயித்யாதி.) கைதொடனாய் - ஸஹாயமாய். * மதிக்கு விசேஷணமிட்டதால் பலித்தவர்த்தமருளிச்செய்கிறார் (தன்னித்யாதி.) வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (தன்னுடம்பிலேயித்யாதி.) முயலை - சசத்தை. விஹ்ருதி என்றது-சந்த்ரனை. கீழ்வாக்யவிவரணம் (போரிலேயித்யாதி.) விடுநகம் - விரல்கிட்டி. ... ... ... அ.

† “ வேண்டாயேயாயினும்” என்று சில ஸ்ரீகோசங்கள்.

ஒன்பதாம்பாட்டு. (நிலையித்யாதி) ஆத்மாஹமாக உன்திருவடிக ளிலே கைங்கர்யம்பண்ணவாய்த்து இத்தை வகுத்தது; அது திருவு ள்ளத்தாலே வேண்டா என்றிருந்தாயாகிலும்.(என்முலையாளவித்யாதி) என்முலையானது ஆட்செய்ய,

ஒன்பதாம்பாட்டு.— ( நிலையாளாவித்யாதி ) ஸத்தையுள்ளதனையு மவன்றிருவடிகளிலே வணங்கி வர்த்திக்குமிதுவேயாய்த்து ஸ்வரூபத் தோடு சேர்ந்தசெயலாவது. (நின்னித்யாதி) அதப்படியேயாகிலும், "இவனுமிப்பேற்றைப்பெறுவான்" என்று அவன் நினைக்கிலிறே அது ஸித்திப்பது.( நிலையாளா நின்வணங்க † வேண்டாயேயாகிலும்;)கிடை க்கில் பெறவேண்டியிருப்பது இதுகாணும். கடக்கநின்று ஒரு ப்ர யோஜநங்களைக்கொண்டுபோகையன்றிக்கே, கிட்டநின்று அவன்றிருவ டிகளிலே நித்யகைங்கர்யம்பண்ணவாய்த்து ஆசைப்படுவது. ஸ்ராஹ்ம ணர் பிச்சேறினாலும் ஓத்துச்சொல்லுமாப்போலே, தலைமகளான ஸமயத்திலும் சேஷத்வாநுரூப வ்ருத்தியையே யாசைப்படுகிறளிறே. (நிலையாளாநின்வணங்க) என்றத்தாலே - ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணி ற்று; ( வேண்டாயேயாகிலும் ) என்கையாலே – ப்ராபகநிஷ்கர்ஷம் பண்ணிற்று. அவன்வேண்டியிராதவன்று இப்பேறு கிடையாதிறே. இது நமக்கு உபேக்ஷாவிஷயம் – வேம்பென்றிருந்தாயேயாகிலும். (என்முலையாள) நான் ஸத்தைகொண்டு நிர்வஹித்தேனும்படியாக.

ஒன்பதாம்பாட்டு.— (நிலையாளாவித்யாதி.) கீழ்ப்பாட்டில் - "கொள்வாயோ மணிநிறமே" என்னச்செய்தேயும், அவனிவளுக்கு முன்னிலையாய்த் தோற்றின மாத்ரமாகையாலே ஒருபடியேதோற்றிக்கொண்டு நிற்க, அது முன்னிலையாகத் தோற்றின மாத்ரமென்றறியாதே, அவன்தானே தன்னை வேண்டாதிருக்கிறானாகக் கொண்டு தான் திருமுலைத்தடங்கள் அனைக்கையிலே கணிசிக்க, செய்வதறியாதே அவனைக்கலவியிரக்கிறாளென்று ஸங்கதி.

நிலைநின்ற ஆளாய்க்கொண்டு நின்னைவணங்கி நித்யகைங்கர்யம்பண்ண உன க்குவேண்டா விட்டாலும் என்று ஸ்வார்த்தமாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸத்தையித்யாதி.) கைங்கர்யத்தைவேண்டுமவர் தாமாயிருக்க, அவனை " வேண் டாயேயாகிலும்" என்கிற தென்னென்ன வருளிச்செய்கிறார் ( அதுவித்யாதி. ) "ஆகிலும்" என்றதுக்குத் தாத்பர்யம் (கிடைக்கிலித்யாதி;) நிலையாளாய் வணங்கு கையே பரமபுருஷார்த்தம், அது கிடையாமையால் "அகலத்தால் - ஒருநாள் - ஆளா ய்"என்கிறாளென்று கருத்து. விவரணம் (கடக்கவித்யாதி.)ஒருப்ரயோஜநமென்று- ஸ்வார்த்தமான காதாதிக்க ஸம்ஸ்லேஷமென்றபடி. நாயிகையாயிருக்குமிவளுக்கு ஸம்ஸ்லேஷத்தை ப்ரார்த்திக்கையே புருஷார்த்தமாமித்தனைபோக்கி, சேஷவ்ருத்தி யையபேக்ஷிக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஸ்ராஹ்மணரித்யாதி.) ப்ரா ஸங்கிகமாக ப்ரமேயஶிக்ஷைசெய்தருளி, வேண்டாயாகிலும் என்னாதே "வேண் டாயே" என்கிற ஏவகாரத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இதுநமக்கித்யாதி.) வேம்பென்றது - தாத்பர்யாக்ஷரம். அதாவது - த்யாஜ்யமென்றபடி.

† "வேண்டாயேயாயினும்" என்று சில ஸ்ரீகோஶங்கள்.

உன்திருமார்விலே அவற்றை யடிமைகொள்ளாயாகில். ( சிலையாளா ) ஸ்ரீஸார்ங்கத்தையடக்கி யாளுகிறவனே. ( மரமித்யாதி ) மாராமரம் ஏழையுமெய்த பெருமிடுக்கனே.

---

"கொங்கைகிளர்ந்து குமைத்து" என்று-க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் "சோறு, சோறு" என்று அலைக்குமாப்போலே, இம்முலைகளுக்காற்ற மாட்டாதே நோவுபடுமது தவிர்ந்து என்னுடைய ஸ்த்ரீத்வங்கொண்டு நிர்வஹித்தேனும்படி. (என்முலையாள) மத்தகஜத்தைநக்கட்டி யாள்வாரைப்போலே என்முலையை நான் நிர்வஹிக்கைக்காக. நமக்கபேக்ஷையின்றிக்கே யிருக்கச்செய்தே உன்ப்ரயோஜநத்துக்காக நம்மை யிப்படிசெய்யச்சொன்னுலதுசெய்யப்போமோவென்ன (ஒருநாள்) நித்யமாய்வருமதுதவிருகிறது; ஒருநாள் பிறருகந்தவைகாளிலே பரிமாறினுலாகாதோ.(ஒருநாள்) பலநாள்வேணுமென்றிருக்கவேண்டா, ஒருநாளாகிலுமமையும். அவ்வொருநாள் என்நெஞ்சிலிலியையாகில் செய்யப்போமோ வென்ன ( உன்னகலத்தாலாளாயே ) உன்நெஞ்சை நீயுகந்தார்பக்கலிலேவைத்து உடம்பைக்கொண்டணையவமையும்.

*நெஞ்சை நினைத்தார்க்குவைப்பது, வேறுமார்வாலெங்களையணைவது, இப்படிதான் செய்யவேண்டுகிறதென், வேண்டியிராதவிஷயத்திலே யொருநாள்தான் செய்யவேண்டுகிறதென்னென்ன (சிலையாளா) என் ஆர்த்தய்வநிகேளாமைக்காக."க்ஷத்ரியைர்யார்யதே" என்கிறபடியே — ஆர்த்தய்வநிகேளாமைக்கன்றே நீர்விற்பிடித்திருக்கிறது. நாம் விற்கொண்டெங்கே காரியங்கொள்ளக்கண்டு வினாக்கிறதென்ன ( மரமெய்ததிறலாளா ) உன்னைவிஸ்வஸியாதாக்கும் மறுவேந்திக்காரியம் செய்யுமவனன்றோ; உன்னை ஆஸ்ரயித்த மஹாராஜரார்த்தி போக்குகைக்காக மராமரங்களையெய்து மறுவேந்திக்கொடுத்திலையோ.*

---

கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் ( கொங்கையித்யாதி. ) மேலுக்கவதாரிகை (நமக்கித்யாதி.)

(உபேக்ஷாவிஷயம்) என்றத்தைப்பற்ற - "ஒருநாள்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்து, (வேம்பு) என்ற தாத்பர்யாநுகுணமாக, "ஒருநாள்" என்றதுக்கு-உக்திப்ரத்யுக்திரூபேண வருளிச்செய்கிறார் (வேண்டியித்யாதி.) வேண்டியிராத விஷயத்தில் - வேம்பான விஷயத்தில். ஒருநாள்தானென்றது - ஒருநாளாகிலுமென்றபடி.

ஒருநாளாகிலுமமையு மென்றது - உனக்கு வேம்பானாலும் வேப்பங்குடிநீர் போலே ஸ்வீகரிக்கலாமென்றபடி. இத்தால் - உனக்குக்கைத்தவம், எனக்கு இனித்தானத்தைச்செய்யவேணுமென்று ப்ரார்திக்கிறாளென்றதாய்த்து. பாரார்யமாகவாகிலும் செய்யவேணும் என்னும் நினைவுவேண்டாவோ என்னும் ஸங்கையையநுவதித்து, "அகலத்தால்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வொருநாளித்யாதி.)

அநுவாதபூர்வகம் மேலுக்கவதாரிகை (நெஞ்சையித்யாதி.) கீழ்ப்பண்ணின ப்ரஸ்நத்துக்குத்தரம் (ஆர்த்தய்வநிகேளாமைக்காகவென்றது.) இவ்வர்யம் இந்த பக்ஷத்தில் ஸுலிக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (க்ஷத்ரியைரித்யாதி.)

(திருமெய்யமலையாளா) திருமெய்யத்தில் நீசாய்ந்தருளிற்று எங்களுடைய ரக்ஷணீயமாகவன்றோ. அம்மங்கியம்மாளுடைய சரமதசையிலே, நஞ்ஜீயரறியவெழுந்தருளினவர், அவர்படுகிறக்லேசத்தைக்கண்டு, "இங்குத்தை ஆசார்யஸேவையும் பகவத்குணங்களோடே போதுபோக்கினபடியுமெல்லாங்கிடக்க, அல்லாதாரைப்போலே இப்படிபடவேண்டுவதே!" என்ன; "'நீயாளவளையாளமாட்டோமே' என்றன்றோ—பகவத்பரிக்ரஹமானால் க்லேசப்பட்டே போமித்தனைகாணும்" என்றார்.

---

பின்னை நீரும் அவ்வவதாரத்திலே வந்துதவிற்றிலீரேயென்ன (திருமெய்யமலையாளா) அவ்விழவு தீர்க்கைக்காகவன்றோ திருமெய்யத்திலே வந்து சாய்ந்தருளிற்று. இருந்தபடியால் உன்பரிக்ரஹமாகையும் கையில்வளை தொங்குகையுமென்றொரு பொருளுண்டோ. இப்போது தன்னாற்றாமையாலேயொன்றைச்சொல்லுகிறாளத்தனைபோக்கி ஒருக்காலும் கையில்வளை தொங்குகைக்கு விரகில்லைகாணும். கிட்டினால் தானே ஹர்ஷத்தாலே பூரித்து நெரிந்திற்றுப்போம்; பிரிந்தானில் தானே கழன்றுபோம். உன்னுடையபரிக்ரஹமாய்எங்களுடைய ஸ்த்ரீத்வங்கொண்டு நோக்குகையென்றொருபொருளுண்டோ.

அம்மங்கியம்மாளுடைய சரமதசையிலே நஞ்ஜீயரறியவெழுந்தருளினவர், அவர்படுகிற க்லேசங்களைக்கண்டு, "இங்குத்தை ஆசார்யஸேவைகளும் பகவத்குணங்களைக்கொண்டு போதுபோக்கினபடிகளுமெல்லாம் கிடக்க அல்லாதாரைப்போலே யிப்படி படவேண்டுவதே!" என்ன; "'நீயாள வளையாளமாட்டோமே' என்றன்றோ—பகவத்பரிக்ரஹமானால் க்லேசப்பட்டேபோமித்தனைகாணும்" என்றார்.

---

"நீயாள" இத்யாதிக்குக்கருத்து (இருந்தபடியாலித்யாதி.) இருந்தபடியாலென்றது-நீ மெய்யமலையாளனாயவைத்தும் என்முலையாளவொருநாளுமாளாதேயிருந்தபடியாலென்றபடி. நீயென்னையாளவும் நானவனையாளவும் இருவரும் மாட்டோமே யென்று ஸம்ஹார்யமாகையால், அவனிவளையாளமாட்டினால் அத்தால் இவள் இவ்வளையை ஆளவல்லளோவென்ன; வ்யாக்யாதாபரிஹரிக்கிறார் (இப்போதித்யாதி;) ஆற்றாமையால் சொல்லும்பாசுரமத்தனையென்றுகருத்து. நான் திருமெய்யமலையாளனாய் உன்போல்வார்க்குவந்திருக்கின்றேனென்றறிந்துவைத்து, "உனகலத்தாலாளாயே" என்று நான்மற்றுச்சொல்லுகை உன்ஸ்த்ரீத்வத்துக்குச் சேருமோவென்னும் சங்கைக்குப் பரிஹாரமாக, "நீயாளமாட்டோம்" என்கிறாளென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னுடைய வித்யாதி;) நீயாளுகையாலே நாங்களவனையாண்டிருக்க மாட்டோமென்று ஸம்ஹார்யம். இத்தால் - ப்ரணயிகவிஷயமாகையால் ஆறியிருக்கமாட்டோமென்கை.

"வளையாளமாட்டோமே" என்கிற அவதாரணத்துக்கு - பகவத்பரிக்ரஹமானார்க்கு து:க்கமேஶேஷிக்குமென்று கருத்தாய், அதுக்கு ஸம்வாதம்காட்டுகிறார் (அம்மங்கியித்யாதி.) இப்படி படவேண்டுவதே என்றது - ஆசார்யஸேவை, பகவத்குணாநுபவம், இவையே காலக்ஷேபமாகவிருக்கிற உமக்கு, அதுக்கவகாசமில்லாதபடி ஸம்ஸாரிகளைப்போலே நோவுபடவேண்டிற்றேயென்கை.

மூ.—மையிலங்கு கருங்குவளை மருங்கலரும் வயலாலி
நெய்யிலங்குசுடராழிப்படையானை நெடுமாலைக்
கையிலங்குவேற்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை
ஐயிரண்டுமிவைவல்லார்க் கருவினைகளடையாவே ௧0.

ப - ரை.—கையிலங்குவேல்கலியன் - ப்ரகாசிக்கிறவேலைக்கையிலேயுடைய ஆழ்வார், மையிலங்குகருங்குவளை - அஞ்சனம்போல விளங்கும் கறுத்தகுவளைமலர்கள், மருங்கு - பார்ச்வத்திலே, அலரும் - விகஸியாநின்றுள்ள, வயல் - கழனி சூழ்ந்த, ஆலி-திருவாலியிலேயிருக்கிற, நெய் - கூர்மையுடைத்தாய், இலங்கு - விளங்காநின்ற, சுடர் - புகரையுடைய, ஆழிப்படையானைநெடுமாலை - திருவாழியைக் கையிலேந்திய ஸர்வேச்வரனை, கண்டு - எதிரில் கண்டு, உரைத்த-அருளிச்செய்த, தமிழ்மாலைஐயிரண்டும் இவைவல்லார்க்கு - தமிழ்த்தொடையத்தும் நன்றாக அறிய வல்லவர்களுக்கு, அருவினைகள் - துஷ்கர்மங்கள், அடையாவே-சேரவேமாட்டா என்று நிசமிக்கிறார். ... ... ... ... ... (௪0)

புறப்பட்டபின்பு, நஞ்ஜீயர், பிள்ளையைப்பார்த்து, "முடிகிற விவ்வளவிலு மிவ்வார்த்தைசொல்லுகிறது - விச்வாஸத்தின் கனமான ஸாவஸ்யத்திலூற்றமிறே" என்றருளிச்செய்தார்.

ஆக, இப்பாட்டால் - ப்ராப்ய நிஷ்கர்ஷமும், ருசியுடையரானபடியும், ஸரண்யனானவனுக்கு ரக்ஷகத்வம கண்ணழிவற்றபடியும், இத்தலையிலபேக்ஷைகுறைவற்றிருக்கிறபடியும், இவையெல்லாவற்றையும சொல்லுகிறது. (நிலையாளா) என்கையாலே-ப்ராப்யமென்னுமிடம் சொல்லிற்று; (மரமெய்த) என்கையாலே-ரக்ஷகத்வம் கண்ணழிவற்றபடியும், இத்தலையிலபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியும், இவையெல்லாவற்றையும் சொல்லுகிறது. ... ... ... ௭.

புறப்பட்டபின்பு, நஞ்ஜீயர், பிள்ளையைப்பார்த்து, "முடிகிறவிவ்வளவிலேயுமிவ்வார்த்தைசொல்லுகிறது - விச்வாஸத்தின் கனமான ஸாவஸ்யத்திலூற்றமிறே" என்றருளிச்செய்தார்.

ஆக, இப்பாட்டால் - ப்ராப்யநிஷ்கர்ஷமும், ருசியுடையார்படியையும், ஸரண்யன்படியையும், அவனுக்கு ரக்ஷகத்வம் கண்ணழிவற்றிருக்கிறபடியையும், இத்தலையில் அபேக்ஷைகுறைவற்றிருக்கிறபடியையும், இவையெல்லாவற்றையும் சொல்லுகிறது (நிலையாளா) என்கையாலே - நித்யகைங்கர்யம் பெறுகையே ப்ராப்யமென்னுமிடம சொல்லுகிறது ; (வேண்டாயேயாகிலும்) என்கையாலே - உபாயஸாவஸ்யமவன்பக்கலிலே யென்னுமிடம் சொல்லிற்று ; (என்முலையாளவொருநாள்) என்கையாலே - ருசியுடையார்படி சொல்லிற்று ; (சிலையாளா) என்கையாலே-ஸரண்யதைசொல்லிற்று ; (மரமெய்த) என்கையாலே-ரக்ஷகத்வம் கண்ணழிவற்றிருக்கிறபடியையும், இத்தலையிலபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியையும், இவையெல்லாவற்றையும்சொல்லுகிறது.

"க்லேசப்பட்டேபோமித்தனை" என்னப்போமோவென்ன ; ஸாவஸ்யத்திலுறைப்பாலே அங்ஙன்சொன்னதென்று கருத்ததை வெளியிட்டபடியையுங் காட்டுகிறார் (புறப்பட்டவித்யாதி.) ... ... ... ... ... ௧.

பத்தாம்பாட்டு. (மையிலங்கித்யாதி) மைபோலேவிளங்காநின்ற கருங்குவளையானது பர்யந்தத்திலே அலருகிற வயலையுடைய திருவாலி. (நெய்யித்யாதி) நெய் - கூர்மை. கூர்மையையுடைத்தாய் விளங்காநின்ற புகரையுடைய திருவாழியைக்கையிலேயுடைய ஸர்வேச்வரனை.

---

பத்தாம்பாட்டு.—(மையிலங்கித்யாதி) இதுவாய்த்து பயிரேறாதே தரிசான நிலமிருக்கும்படி. ஊரில்தரிசுகிடக்கும் நிலமிருக்கும்படியிதுவாய்த்து. மையானது மிகவும் விளங்காநின்றுள்ள கறுத்தகுவளைப்பூக்களலர்ந்து கிடக்குமாய்த்து பர்யந்தங்களையுடைய. நாள்செல்ல நாள் செல்லக்குறைந்துவருகையன்றிக்கே நிறமுஜ்ஜ்வலமாகாநின்றுள்ளகருங்குவளைகளானவை அலருகிற பர்யந்தங்களையுடைத்தான வயலையுடைய திருவாலி. (நெய்யிலங்கித்யாதி) புறம்பு அவையும் உள்ளில் அவனுடைய நிறமுமாய் முன்னடிதோற்றாதாய்த்து கையில் திருவாழியன்றாகில். (நெய்யிலங்கித்யாதி) வயலிலிருட்சிக்கும், குவளைப்பூவால்வந்த விருட்சிக்கும், கையில் திருவாழியால்வந்த வொளியல்லவாகில் முன்னடி தோற்றாதுகாணும். (நெடுமாலை) தூதுவிடவும் வார்த்தைசொல்லவும் மாட்டாதே நிற்கிறேன்போலேகாணும். தூதுவிடமாட்டாதபடியாய்த்து அத்தலைபட்டுக்கிடக்கிறது. இத்தலை "ஸர்வஸமாஸநஜீவிஷ்யே" என்றால், "நஜீவேயம்" என்னுமித்தனையிறே அத்தலை.

---

பத்தாம்பாட்டு.— (மையித்யாதி.) உட்கருத்தை முதலுறவருளிச்செய்கிறார் (இதுவித்யாதி.) செங்கமலங்களுண்டாயிருக்கலாமே, இதுவே என்று சொல்லுகைக்கு நிமித்தமென்னென்னவருளிச்செய்கிறார் (ஊரிலித்யாதி;) தேசவிப்ரக்ருஷ்டமான பரமபதமன்றிக்கே, காலவிப்ரக்ருஷ்டங்களான விபவங்களுமன்றிக்கே, கரணவிப்ரக்ருஷ்டமான அந்தர்யாமியுமன்றிக்கே, தாமிருந்ததிருவாலியிலிருந்தவளைக்குறித்துத் தூதுவிடுகையும், அவன் முன்னிலையாகத் தோற்றினானைக்கொண்டு தன் உண்மையையறிவிக்கையுமாம்படி ஜ்ஞாநவிபாககார்யமான அஜ்ஞாநம் விளைந்தமைதோற்றும் விசிஷ்டாநுமாநமாக, குவளைகளின ஸம்ருத்தியைச்சொல்லுகிறாரென்று கருத்து. ஒருபடிக்கையிலே பிரியுமிறந்தாற்போலே இவர்க்கு இத்திருமொழியில் ஸாரமும்; அத்தையட்கொண்டு வ்யாக்யாதா ஈடுபடுகிறாரென்று கொள்ளுவது. "ஊர்" என்கையாலே - ஆழ்வார்தாமும் அப்படியிருக்கிறாரென்று ஸூசிதமாகிறது; இங்ஙனன்றாகில் இரண்டுவாக்யமும் புநருக்தமாமிறே. இவ்வாழ்வாருடைய ஜ்ஞாநகார்யமான அஜ்ஞாநத்தின் ஸீமாவதிக்குப்போரும்படி குவளைக்குள்ள நிறத்தின் மிகுதியைச்சொன்னத்தை நியாமகமாகக்காட்டுகிறார் (மையானதித்யாதி.) "குவளை" என்றபோதே கருமைதோற்றுமே, இங்ஙனிருக்கச்செய்தேயும், "கரும்" என்றும் "மையிலங்கு" என்றும் விசேஷணத்வயமிடுகையாலே தம்முடைய தசைக்கு த்ருஷ்டாந்தமாகச் சொன்னாரென்னுமிடம் ஸூசிதமிறே யென்று திருவுள்ளம். வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (நாளித்யாதி.) இப்போது * சுடராழியையிட்டு விசேஷிக்கைக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (புறம்பித்யாதி.) இத்தால் - விச்லேஷித்தாராக வெண்ணியிருக்கிற தம்படியாலும் அவனும் வ்யாமோஹாதிசயத்தாலே "*மயர்வறமதிநலம்பெற்றவர் இங்ஙன் விச்லேஷித்துப் படுகிறபாடுகாண்கையாலே நான்றானும் விச்லேஷித்தேனாகவேணும்" என்றுகலங்கித் தூதுவிடவும் மாட்டாதே உருவுவெளிப்பாட்டால் வாய்விடவும்மாட்டாதே யிருக்கிறதசையிலே, நெஞ்சறியுமவனை திருவாழியாழ்வான் இருவருக்கும் வெளிச்சிறப்பைக் கொடுத்தானென்றநுஸந்திக்கிறாரென்று திருவுள்ளம். கீழ்வாக்யத்தைவிவரிக்கிறார் (வடிவிலித்யாதி.)

**(கையிலங்கித்யாதி) கையிலே விளங்காநின்ற வேலையுடைய ஆழ்வார் ஸர்வேஶ்வரனைக்கண்டுசொன்ன தமிழ்மாலைபத்தும் வல்லவர்களுக்கு அருவினைகள் சேரா.** ... ... ... ... க0.

நஞ்ஜீயர் திருவடிகளே ஶரணம்.

(கையிலங்கு) ஹட்டர், "ஸர்வேஶ்வரன் திருமங்கையாழ்வார்க்குப் பக்கக் குதிரையேறிப்போமாகாதே!, அவன்கையில் திருவாழிஅழகுக்குடலாக வொப்பித்திருக்குமத்தனை, இவர்கையில் வேல் ஶத்ருநிரஸநத்தாலே கறைகழுவ அவஸரமின்றிக்கேயிருக்குமாய்த்து." அவன் ஶேஷித்வ ஸூசகமாகத் திருவாழியைப்பிடித்தாப்போலேயாய்த்து இவர் ஶேஷத்வஸூசகமாகத் திருவேலைப்பிடித்தபடி. (கண்டுரைத்த) ஈஶ்வரர்க்கு வார்த்தை சொன்னபடிகேட்டு அவன் முன்னேவந்து நிற்கக்கண்டு சொன்ன. (அருவினைகளடையாவே) அவனைப்பிரிந்து நோவுபட்டுத் தூதுவிடுகைக்கு ஹேதுவான பாபங்கள் கிட்டாது. ஸர்வேஶ்வரனைப் பிரிந்து தூதுவிடப்புக்கு அதுதானுங்கூட மாட்டாதேபடும் வ்யஸநம்படவேண்டா இப்பத்தையுமப்யஸித்தார்க்கு. தூதுவிடுவானவன்றாய்த்து. ... ... ... ... ... க0.

அடிவரவு.— தூவிரிய பிணி நீர் தான் வாள் தாராய
கொண்டு குயில் நிலை மையிலங்கு கள்வன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேஶரணம்.

இவ்வாழ்வார் திருவாலியம்மானை விஶ்லேஷித்தாராகக்கொண்டு நோவுபடுகிறவேளையிலே திருவாழியாழ்வான் செய்யூட்டிய புசர்படைத்துத் திருவுள்ளத்தைக் குடிகொள்ள, இவர் அவ்வழகில் கண்வைத்து அவனுள்ளத்தையுங்கண்டு ஈஜதார்யராய், "இச்சேர்த்திக் கென்வருகிறதோ" என்று கையில் வாள்பற்றியிருக்கிறுரென்று விவக்ஷித்து, "கையிலங்கு" என்று விஶேஷணமிடாமையாலே ஹலித்தகறையைச் சொல்லுகையாலே இப்படிசொல்லலாமென்று ஸம்வாதம் காட்டுகிறுர் (ஹட்டரித்யாதி, இருக்குமாய்த்து என்னுமளவும்.) ஶத்ருநிரஸநத்துக்குடலாக வேலைப்பிடித்தாரொன்றருளிச்செய்து, சேவகனுக்கு வேல்திருபகமென்று ஸஜ்ஜீவ்ஷ்டாதும் தாத்பர்யாதரமருளிச்செய்கிறுர் (அவனித்யாதி.) பாட்டுக்களெல்லாம் கண்டு சொன்னதுகளன்றேயென்ன வருளிச்செய்கிறுர் (ஈஶ்வரர்க்கித்யாதி.) ... ... ... ... ... க0.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மூன்றும்பத்து - ஆறுந்திருமொழி ஸம்பூர்ணம்.

ஆக, திருமொழி - உகூ - க்கு, பாட்டு - உகூ0.

# மூன்றும்பத்து - ஏழாந்திருமொழி - கள்வன்கொல். ப்ரவேசம்.

"திருமெய்யமலையாளா நீயாளவளையாளமாட்டோம்" என்று அவனேயின்றாக; அவனும், "இப்படி நம்மையின்றாம்படி நோவுபட விட்டோமாகாதே" என்று லஜ்ஜித்து, "என்முலையாள வொருநாளுன்னகலத்தாலாளாயே" என்று இவளாசைப்பட்டபடியே வந்து தன் மார்விலே இவளையாரவணைத்து, இவளுடனேகலந்து, "ஒருநாள்" என்றிவள்சொன்ன ஆற்றாமையைத் திருவுள்ளம்பற்றி, "நிலையாளா நின்வணங்கவேண்டாயேயாகிலும்" என்றதுவும் திருவுள்ளத்திலேகிடந்து, இனி யிவளைவிடப்போகவொண்ணாது என்று இவளையுங்கொண்டு ஒருவரறியாதபடி அர்த்தராத்ரத்திலே புறப்பட்டுப்போக, திருத்தாயார்

நாதுவிட்டு ஊதர்க்குச்சொன்ன பாசுரம் நெஞ்சிலே யூற்றிருந்து அத்தைநாவித்து, ஹாவநாப்ரகர்ஷத்தாலே அவன்றான் முன்நின்றுகைக்கொண்டு அவனுக்கு வார்த்தைசொல்லும்படி பிறந்த உபாவிசேஷம் அவன் திருவுள்ளத்திலேபட்டு, அதுபொறுக்கமாட்டாதவனுகையாலே தானேவந்து முகங்காட்டி, இவளைக்கூடக்கொண்டு போக; அநிவாஹிகரைவரக்காட்டிக்கொண்டுபோம் சிலரை, பெரிய திருவடியை வரக்காட்டிக்கொண்டுபோம் சிலரை, "நயாமி" என்று தானே கொடுபோம் சிலரை; அப்படியே, தானேவந்து அத்தவாளத்தலையாலே மறைத்துக் கொண்டுபோக; அதேரங்கமாகக்காத்துக்கொடு கிடந்த திருத்தாயாருணர்ந்து படுக்கையிலிவளைக் காணாமையாலே, போனவன் படிகளையும், தனக்கவளையொழியச் செல்லாமையையும், எதிர்த்தலையிப்படி படவேண்டும்படியிருக்கிற விவளுடைய வைலக்ஷண்யத்தையும், தன்னிழவையும் சொல்லிக்கூப்பிடுகிறாளாய்ச் செல்லுகிறது.

கள்வன்கொல் ப்ரவேசம்.— கீழ்த்திருமொழியில் ஹாவநாப்ரகர்ஷத்தாலே "என்முலையாள - உன்னகலத்தாலாளாயே" என்று ப்ரார்த்திக்கச்செய்தேயும் அவன் செய்யாமலிருக்கையால், அவனை "ஆளமாட்டோமே" என்றுகிடந்த இப்பெண்பிள்ளை, இத்திருமொழியில் பினதுடர்ந்து போனாளாகக்கொண்டு திருத்தாயார் சொல்லுகைக்கு ஸங்கதி யென்னென்ன; வ்ருத்தவர்த்திஷ்யமாண கதாக்ரமேவ வருளிச்செய்கிறார் (நாதுவிட்டித்யாதி.) இத்தால்-மாநஸாநுபவத்தில் ஒரு வைசஷ்யத்தாலே அவன் வந்தானாகவும், தன்மகளும் வயலாலிமணவாளனும் ஒருபடுக்கையில் சேர்ந்தார்களாகவும், தான் கிட்டக் காத்துக்கொண்டிருந்தாளாகவும், இங்ஙனிருக்க தான் கண்ணுறங்க, அப்போது "நிலையாளா நின்வணங்கவேண்டாயேயாகிலும்" என்று இவள்சொன்ன இழவுதிருவுள்ளத்திற்பட்டு அதுதீர இப்பெண்பிள்ளையைக்கொண்டு புறப்பட, படுக்கையிற்காணமல் தானும்புறப்பட்டு, கண்டுகொண்டிருக்கவே கொண்டுநடந்தான் என்றவொருஉபைபிறந்து அநுபவிக்கிறாளென்றதாய்த்து. (முகங்காட்டி) என்றவுந்தரம், ஸம்ஶ்லேஷித்து என்றபடி. தானே வந்து கொடுபோனபடியைத்ருஷ்டாந்தபூர்வகம் விவரிக்கிறார் (ஆதிவாஹிகரையித்யாதி.) "கள்வன்" என்றத்தைப்பற்ற (அத்தவாளத்தலையாலேயித்யாதி.) அத்தவாளத்தலை - தலைமுன்தானை.

உணர்ந்து படுக்கையைப்பார்த்து, படுக்கையிற்காணாதபடியாலே,"இவளைக்கொண்டிவன்போனான்,எவ்வழியேபோய் எங்கேபுகுகிறார்களோ,

அவனிவளைக்கொடுபோகையாவதென், – ஸ்வாபதேசத்திலோடு கிறதென்னென்னில்; மாநஸாநுபவமாயிருக்கச்செய்தே வாஹ்யஸம்ஶ்லேஷம்போலே யிருக்கப்பண்ணிக்கொடுத்ததொரு வைஶத்யத்தைச்சொன்னபடியிறே. [ஸ்மிதேமநஸி] * நின்றவாநில்லாநெஞ்சும் ஓரிடத்திலே நிற்கப்பெற்று, உபயாத்மகமான ஶரீரமுமங்கேயிங்கேயஸ்திலமாகாதே ஒருபடிப்பட்டு, யாதுக்களுமொன்று மடங்கி ஒன்றாநிமிருகையன்றிக்கே ஸாம்யாவஸ்யையைஸஜித்து, இப்படி ஶரீரத்திலே யொருலாவவம்பிறந்து ஸத்வமுத்ரிக்தமான ஸமயத்திலே, ஆரேனுமொருவனாகவுமாம், தான் கீழ்ஸம்ஸாரியாய் நின்ற நிலையையும்,இத்தைக்கழித்துக்கொள்ளுகைக் கீடாயிருப்பதொரு கைம்முதல் தன்பக்கலின்றிக்கேயிருக்கிறபடியையும், அவனைப்பற்றியே கழிக்கவேண்டும்படியிருக்கிறபடியையும்,இதில்நின்றும் கரையேற்றுகைக்கீடான ஶக்தியும் ப்ராப்தியுமவன்பக்கலிலே யுண்டாயிருக்கிறபடியையு மநுஸந்தித்து அவன்பக்கலிலே ஸந்யாஸத்தைப்பண்ணுவது. பின்னை பேற்றுக்கு இவ்வளவமையுமோவென்னில் ; ஶரீரத்தைப்பற்றி வருமவற்றுக்கு ஆத்மாஸ-வஅஹ்வாநுபவம் பண்ணுமாப்போலே, இவற்றுக்கு வருமவை தன்னதாம்படி விஶ்வஶரீரனுமாய், இவன்றன்னையுமொருக்காலநுஸந்தித்தால் பின்பிவனைப்போலே மறக்கைக்கடியான ஜந்மநிபந்தநமான கலக்கமின்றிக்கே யிருக்குமவனுமாகையாலே அவ்வளவமையும். இப்படி ஒருநாளநுஸந்தித்தவன் ப்ரக்ருதிவஶ்யனாய் பின்பு தன் தேஹயாத்ரையிலே அந்யபரனாய்த்திரிந்து பின்பு ஸ்மரிக்கைக்குங்கூட. யோக்யதையில்லாதபடி * காஷ்டபாஷாண ஸந்நிபனாய்க்கிடக்குமன்று, இவனைப்போலே ஒருக்கால் ஸ்மரித்தால் பின்பு விஸ்மரிக்குமவ னன்றிக்கேயிருக்கிற நான் ஸ்மரித்தபடியே யிருப்பன்.

"இவளைக்கொடுபோகையாவதென்" என்றத்தை விவரிக்கிறார் (ஸ்வாபதேஶாத்திலித்யாதி.) ஓதஷ்டாதமாகக் கீழ்ச்சொன்ன ஶ்லோகத்துக்கு வ்யாக்யாநம் (ஸ்மித இத்யாதி.) மநஸ்ஸ்வாஸ்ய்யாதிகளைச் சொன்னவித்தால்ஃபலித்த அர்த்தத்தையருளிச்செய்கிறார்(இப்படிஶரீரத்திலேயித்யாதி.)"ஸ்மிதேமநஸி" என்று இப்போது சொல்லுகையால்-முன்பு விஷயப்ரவணமாயிருந்தமை தோற்றுகையாலே,அத்தைப்பற்றிவரும்ஸ்மரணவிஶேஷத்தையும்,"ஶரீரே-ஸ-ஸ்வஸ்யே"என்கையால்தோற்றின பூர்வத்திலஸ்வஸ்யதையால்ஃபலித்தகர்மயோகதோஷயோகத்தைப்பற்றிவரும்ஸ்ம்ருதியையும்," மாம்"என்றபதத்தில்விவக்ஷிதமான உபாயபாவத்தைப்பற்றிவரும்நினைவையும், * அஜபதத்திலும் * விஶ்வரூபபதத்திலும் அர்த்தமான ஶக்தி ப்ராப்திகளைபற்றிவரு மநுஸந்தானத்தையும் - "ஸ்மர்த்தா" என்றபதத்துக்கு அர்த்தமாகத்திருவுள்ளம்பற்றி, அத்தால் பிறந்த நைர்பர்யாநுஸந்தானத்தளவு மர்த்தமாகவருளிச்செய்கிறார் (பின்னையித்யாதி,அமையுமென்னுமளவும்.) "தம்" என்றத்தால் ஸூசிதமாக ஒருநாள் ஸ்மரித்து மறந்திருந்தவனென்று அர்த்தமருளிச்செய்கிறார் (இப்படியொருநாளித்யாதி.)

